கழகக் வெளியீடு : ருடுகூ









சிறுவர்க்குரிய
இனிய கதைகள்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

## பதிப்புரை

சிறுவர் உள்ளங்களை எளிய இனிய சுவையான சிறு கதைகள் நன்கு கவர்கின்றன. அதுவும் பெரிய எழுத்துக்களில் அழகிய படங்களுடன் தடித்த காகிதத்தில் அச்சிடப் பெற்றுக் கவர்ச்சியான முறையில் அமைந்திருப்பின் மேலும் கிளர்ச்சியுடன் சிறுவர் அவற்றைக் கற்க விரும்புவர்.

கழகக் கதைக்கொத்து, கழகக் கதைச்செல்வம், கழகக் கதை விருந்து, கழகக் கதைச்சோலை எனும் நான்கு நூல்கள் இவ்வகையில் கழகவழி வெளிவந்துள்ளன.

இப்போது கழகப் கதைப் பூங்காவைத் தமிழ் இளைஞர்களுக்கு வழங்குகின்றோம். சுவை ததும்பும் தீந்தமிழ்நடையில் திரு. வேலன் அவர்கள் இக்கதைகளை ஆக்கியுள்ளனர்.

தமிழ்நாட்டுப் பெற்றோரும் ஆசிரியப்பெருமக்களும் இதனையும் தம் சிறுவர்களுக்கு வாங்கிக்கொடுத்து இன்பம் ஊட்டுவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

## பொருளடக்கம்

# கழகக் கதைப் பூங்கா

## க. நீல ஆடு

"அரசருடைய உடல்நிலை கவலைக்கு இடமாக இருக்கிறது," என்று ஒரு வைத்தியர் சொன்னார்.

"ஆம்; மோசமாகத்தான் இருக்கிறது," என்று இரண்டாவது வைத்தியர் சொன்னார்.

"ஒரு நீலநிறமுள்ள ஆடு கிடைத்தால் நல்லது," என்று முதல் வைத்தியர் சொன்னார்.

"ஆம்; நீல ஆடுதான் வேண்டும்," என்று இரண்டாவது வைத்தியர் சொன்னார். எதற்கு என்று அவருக்கே தெரியாது.

"நீல ஆடுதானே," என்று மூன்றாவது வைத்தியர் சொன்னார். அவருக்கும் ஒன்றும் புரியவில்லை.

முதல் வைத்தியர் வேலைக்காரியை அழைத்து, "அரசர் நீல நிறமுள்ள ஆடு ஒன்றைப் பார்க்க வேண்டும்," என்று கூறினார்.

"விரைவில் ஏற்பாடு செய்யவேண்டும்," என்றார் இரண்டாவது வைத்தியர்.

"உடனே ஏற்பாடு செய்யுங்கள்," என்றார் மூன்றாவது வைத்தியர்.

மூன்று வைத்தியர்களும் மூட்டை கட்டிக் கொண்டு வெளியே சென்றனர்.

வேலைக்காரிக்கு என்ன செய்வதென்று புரிய வில்லை. நீல ஆடு ஏது? அவள் கேள்விப்பட்டதே இல்லை!

தோட்டக்காரனிடம் போய், "நீல ஆடு எங்கே கிடைக்கும்?" என்று கேட்டாள்.



அரசரும் வைத்தியர்களும்

"நான் அதைப்பற்றிக் கேள்விப்பட்டதே இல்லை," என்று சொன்னான்.

"அது இல்லாவிட்டால் அரசர் பிழைப்பது அரிதாய்விடும். என்ன செய்வது?" என்று வருத்தப் பட்டாள்.

தோட்டக்காரன் எண்ணிப்பார்த்தான். "நீல ஆடு ஒன்று செய்துவிடலாமே," என்று சொன்னான்.

"அது எப்படி முடியும்?" என்று கேட்டாள் வேலைக்காரி.

"ஒரு ஆட்டைக் கொண்டுவந்து அதற்கு நீலச் சாயம் பூசிவிடுவது," என்று ஒருவழி சொல்லிக் கொடுத்தான்.

அப்படியே செய்யலாம் என்று முடிவு செய்தனர். தோட்டக்காரன் ஓர் ஆட்டைப் பிடித்து மரத்தில் கட்டினான். நீலச்சாயம் எங்கும் கிடைக்கவில்லை. கடை கடையாகத் தேடிச் சென்றான்.

வேலைக்காரி காத்துக்கொண்டிருந்தாள். "அரசர் இறந்துபோய் விடுவாரே; என்ன செய்வது," என்று அழுதாள்.

அந்த வழியாக ஒரு பெரியவர் வந்தார். "ஏன் அம்மா அழுகிறாய்?" என்று கேட்டார்.

"எனக்கு ஒரு நீல ஆடு வேண்டும்," என்று சொன்னாள். அரசருடைய நோயைப்பற்றியும், நீல ஆட்டைப்பார்த்தால் நோய் நீங்கும் என்றும் கூறினாள்.

கிழவனார் ஒரு தந்திரம் கண்டுபிடித்தார். "அரசருக்கு ஒரு நீலக்கண்ணாடி வாங்கிப் போட்டுவிட்டால் போகிறது. அவர் காணும் ஆடுகள் எல்லாம் நீல ஆடுகளாகவே தோன்றும். அவருடைய நோயும் நீங்கிவிடும்," என்றுசொன்னார்.



வேலைக்காரி கூத்தாடினுள். கடைக்கு ஓடிப் போய் நீல நிறத்தில் ஒரு மூக்குக் கண்ணுடி வாங்கினுள். அரசரிடம் கொண்டுபோய்க் கொடுத்தாள். அரசர் அதை அணிந்துகொண்டார்.

அரசர் பார்த்த ஆடுகள் எல்லாம் அவருக்கு நீல நிறமுடன் தோன்றின. வைத்தியர்கள் சொன்னபடி நோயும் நீங்கிற்று.

---

## உ. இளவரசியும் பிச்சைக்காரனும்

ஓர் ஊரில் ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு மிகவும் அழகான மகள் ஒருத்தி இருந்தாள். அவளுடைய அழகைப்பற்றி ஊரெல்லாம் வியந்து பேசாதார் இல்லை. ஆனால் அவள் தன்னைப்பற்றிப் பெருமை கொண்டவள். தனக்குத் தகுந்த மாப்பிள்ளை எங்கும் கிடையாது என்று எண்ணி இருந்தாள்.

அரசனுக்கு இதே கவலையாக இருந்தது. ஒரு நாள் சுற்றுப் புறங்களில் உள்ள இளவரசர்களை எல்லாம் அரண்மனைக்கு வரவழைத்தான். எல்லோருக்கும் விருந்து நடந்தது. பிறகு அவர்கள் வரிசையாக உட்கார்ந்தார்கள். இளவரசி அவர்களைப் பார்வை யிட்டாள்.



இளவரசியும் இளவரசர்களும்

அதில் ஒருவன் குண்டனாக இருந்தான். "இந்தப் புளிமூட்டை எனக்கு வேண்டாம்," என்று சொன்னாள். இன்னொருவன் மெலிந்து இருந்தான். "இந்த

எலும்பு மனிதன் யாருக்கு வேண்டும்?'' என்று சொன்னாள். மற்றொருவன் கறுப்பாக இருந்தான். ''இந்தக் கறுப்பண்ணன் எனக்கு வேண்டியதில்லை,'' என்று சொன்னாள். ஓர் இளவரசன் மிகவும் அழகாக இருந்தான். அவனிடம் சற்றுத் தயங்கி நின்றாள். அவள், குற்றம் கண்டுபிடிப்பதிலேயே நோக்கமாக இருந்தாள். இளவரசனுடைய முகத்தில் ஒரு மச்சம் இருந்தது. ''இவரையும் எனக்குப் பிடிக்கவில்லை,'' என்று சொல்லிவிட்டாள்.

அரசனுக்குக் கோபம் பொங்கிற்று. ''உனக்குச் சரியான தண்டனை கொடுக்கப் போகிறேன். நாளைக்கு நம் வீட்டிற்கு வரும் முதல் பிச்சைக்காரனுக்கு உன்னை மணம் செய்து கொடுக்கிறேன், பார்,'' என்று அதட்டினான்.

மறுநாள் காலை அரண்மனைக்கு ஒரு பிச்சைக்காரன் வந்தான். அவன் கந்தல் துணியை அணிந்திருந்தான். தலையை விரித்துக்கொண்டு தாடியுடன் வந்தான். பிச்சைகேட்டுப் பாட்டுப் பாடினான். பாட்டு முடிந்ததும் அரசன் அவனை உள்ளே அழைத்தான். மந்திரிகளின் முன்னால் இளவரசியைப் பிச்சைக்காரனுக்கு மணம் செய்து கொடுத்தான்.

இளவரசி அழுதாள். அரசன் பிச்சைக்காரனிடம் கொஞ்சம் பணம் கொடுத்து, ''நீ உன் மனைவியை அழைத்துக் கொண்டு போகலாம்,'' என்று சொன்னான்.

பிச்சைக்காரன் இளவரசியை அழைத்துச் சென்றான். அழுதுகொண்டே அவன் பின்னால் சென்றாள். காடும் மலையும் கடந்து சென்றனர். பிச்சைக்காரன் பாடினான். அவனுடைய குரல் இனிமையாக இருந்தது. பின்புறமாக இருந்து அவனை உற்றுநோக்கினாள்.

"இந்த மலை யாருடையது?" என்று கேட்டாள்.

"நேற்று வேண்டாம் என்று தள்ளிவிட்டாயே அந்த அரசருக்குச் சொந்தமானது," என்று சொன்னான்.

ஓர் அழகான பட்டணத்திற்குவந்து சேர்ந்தார்கள்.

"இந்த ஊர் யாருடையது?" என்று கேட்டாள்.

"இதுவும் அந்த அரசருடையதுதான்," என்று சொன்னான்.

"என்ன முட்டாள்தனம் செய்து விட்டேன். அவர் அழகாகத்தான் இருந்தார். அவரை மணம் செய்துகொண்டு இருக்கலாமே," என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள்.

பிச்சைக்காரன் அவளை ஒரு சிறிய குடிசைக்கு அழைத்துச் சென்றான்.

"இதுதான் நம்முடைய வீடு," என்று சொன்னான்.

இளவரசி கண்ணீர்விட்டு அழுதாள். அவளுக்குப் பசியும் எடுத்தது.

வீட்டின் உள்ளே பார்த்தாள். அடுப்பில் பூனை உறங்கிற்று. பாவம், என்ன செய்வாள்! அவளே சோறு பொங்கினாள். பழக்கம் இல்லாததால் அவதிப் பட்டாள். பிச்சைக்காரனுக்கு ஒரு தோட்டம் உண்டு. அதில் கிடைக்கும் காய்கறிகளை இளவரசி கொண்டுபோய் விற்று வந்தாள். முதலில் வெட்கமாக இருந்தது. இருந்தாலும் கணவனுடைய வார்த் தைக்குக்கட்டுப்பட்டு அவன் சொன்னபடி நடந்தாள்.

ஒருநாள் காய்கறி விற்கும்பொழுது ஒரு குதிரை வண்டியில் மோதிக்கொண்டாள். காய்கள் தெருவில் சிதறிப்போயின. வெறும் கையுடன் வீட்டிற்குத் திரும்பி வந்தாள்.

"போனால் போகிறது. அரண்மனையில் ஒரு வேலைக்காரி வேண்டுமாம். உனக்கு அந்த வேலையை வாங்கித் தருகிறேன் வா," என்று அழைத்துச் சென்றான் அவள் கணவன்.

அவள் அரண்மனையில் வேலைக்காரியாக அமர்ந் தாள். அவளுடைய தற்பெருமை அவளை விட்டு அகன்றது. நன்றாக வேலைசெய்து நல்ல பெயர் வாங்கினாள். பகல் முழுவதும் வேலை செய்துவிட்டு இரவில் வீட்டிற்குப் போவாள். அரண்மனையில் உள்ளவர்கள் சாப்பிட்டு மீதி இருந்தால், அவளுக்கும் கிடைக்கும்.

ஒருநாள் அரண்மனையில் ஒரே கொண்டாட்ட மாக இருந்தது. இளவரசருக்கு அன்று திருமணம்

நடப்பதாகச் சமையற்காரன் சொன்னான். மடியில் பழங்களைக் கட்டி வைத்திருந்தாள். திருமண அறைக்குப் போய் எட்டிப் பார்த்தாள்.

அவள் வேண்டாம் என்று தள்ளிய இளவரசன் அங்கே இருந்தான். அவன் அவளிடம் வந்து, அவள் கரங்களைப் பற்றி உள்ளே அழைத்துச் சென்றான். அவள் மடியில் இருந்த பழங்கள் கீழே விழுந்தன. மங்களவாத்தியம் முழங்கிற்று. இளவரசிக்கு



இளவரசி திருமண அறைக்குள் எட்டிப்பார்த்தல்

மயக்கம் வந்தது. கீழே விழப்போனாள். இளவரசன் அவளைத் தாங்கிக்கொண்டான். அவள் மெதுவாகக் கண்ணைத் திறந்து பார்த்தாள்.

"கண்ணே என்னைத் தெரியவில்லையா? நானே இளவரசன்! நானே பிச்சைக்காரன்! உன் கணவன்!" என்று இளவரசன் மெதுவாகச் சொன்னான்.

"உன் அப்பா சொன்னபடி இந்த நாடகத்தை நடித்தேன் ; உனக்கு அடக்கமும் பணிவும் கற்பிக்க

வேண்டும் என்பது உன் அப்பாவின் விருப்பம். அதன் படிதான் இதுவரை நடந்தது,'' என்று கூறினான்.

முதலில் அவளுக்கு நடுக்கம் உண்டாயிற்று. பிறகு சற்றுத் தேறினாள். இளவரசனுடைய தோளின்மேல் சாய்ந்து கொண்டாள். அப்பாவும் வந்து சேர்ந்தார். மீண்டும் திருமணம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. பெரிய விழாவும் கொண்டாட்டமும் நடந்தன. இதனைக் கண்டவர்களும் கேட்டவர்களும் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

---

## ௬. கசக்கும் தேன்

ஓர் ஊரில் ஒரு மந்திரக்காரி இருந்தாள். அவள் மிகவும் கெட்டவள். அவளை ஊரைவிட்டுத் துரத்துவ தற்கு முயற்சி செய்து பார்த்தார்கள். ஆனால் அது நடக்கவில்லை. அவள் சிரித்தால் கொக்கரிப்பதுபோல் இருக்கும். அது இரண்டு மைல் வரையில் கேட்கும்.

அவள் ஒரு சிறியவீட்டில் வசித்தாள். துடைப்பக் கட்டையில் ஏறிக்கொண்டு வெளியே செல்வாள். அவள் வீட்டின் பக்கத்தில் ஒரு தோட் டம் இருந்தது. அதில் மூலிகைகளை வைத்துப் பயிர் செய்து வந்தாள். அவைகளைப் பறித்து உலரவைத் துப் பலவகையான மருந்துகள் செய்வது அவள் வழக்கம்.

தேனீக்கள் அந்தத் தோட்டத்தில் வந்து விளை யாடிக் கொண்டிருக்கும். மந்திரக்காரியைக் கண் டால் அவைகள் ஓடிவிடும். ஒருநாள் மந்திரக்காரி சந்தைக்குப் பானை வாங்கப் போயிருந்தாள். அதே வேளையில் ஒரு தேனீயும் அங்கே வந்தது. அது மூன்று வேளையும் தேன் சாப்பிடும். வீட்டில் இருந்த தேன் எல்லாம் தீர்ந்துவிட்டது. அதனால் தேனீ நேராகக் கடைக்குச் சென்றது.

“எனக்கு நிறையத் தேன் வேண்டும். ஒரு பெரிய கண்ணாடிப் பாத்திரத்தில் நிறையக் கொடுங் கள்,” என்று கேட்டது.

"உனக்கு ஏன் இவ்வளவு ஆசை?" என்று கடைக்காரன் ஒரு சிறிய சீசாவில் தேன் வார்த்துக் கொடுத்தான்.

"இது போதாது; என்னிடம் ஏராளமாய்ப் பணம் இருக்கிறது; என்னால் தூக்கக்கூடிய அளவு தேன் வேண்டும்," என்று கேட்டது.

கடைக்காரன் ஒரு பெரிய பாத்திரம் நிறையத் தேன் கொண்டுவந்து கொடுத்தான்.

தேனீ பாத்திரத்தைத் தூக்கிக்கொண்டு பறந்து சென்றது. பாத்திரம் பெரிதாக இருந்தது. தேனீ




யின் முகத்தை மறைத்துக்கொண்டிருந்தது. எதிரில் என்ன வருகிறது என்றுகூடத் தெரியவில்லை. தேனீ நேராகப் பறந்து கொண்டே இருந்தது.

சற்று முன்னால் மந்திரக்காரி துடைப்பக் கட்டைமேல் சவாரி செய்துகொண்டு போனாள். தேனீ அவள் தலைமேல் மோதிக்கொண்டு கீழே விழுந்

தது. தேன் கொட்டிப்போயிற்று. பாத்திரம் போன இடமே தெரியவில்லே. தேனீ கண்ணே விழித்துப் பார்த்தது. மந்திரக்காரியின் வீட்டுச் சமையல் அறைக்குள் இருப்பதாகத் தெரிந்தது.

மந்திரக்காரி மருந்து அரைத்துக்கொண்டு இருந்தாள். அவள் தலேயிலும் முகத்திலும் தேன் வடிந்துகொண்டு இருந்தது. அதைப் பார்த்து, தேனீ 'கொல்லென்று' சிரித்தது. தேன் பளபள வென்று மின்னிற்று. அவள் போகிற பக்கம் எல்லாம் தேன் சிந்திற்று. பூனேக் குட்டிகள் தரையில்விழும் தேனே நக்கிக்கொண்டே அவள் பின்னுல் சென்றன.

மந்திரக்காரிக்கு ஆத்திரம் பொங்கிற்று. தொட்ட இடம் எல்லாம் பிசுபிசு என்று தேன் ஒட்டிக்கொண்டது.

"உன் சிரிப்பு எல்லாம் நெருப்புத்தான். உன்னே என்ன செய்கிறேன் பார்!" என்று அவள் உறுமினுள்.

தேனீ தப்புவித்துக் கொண்டு போகலாம் என்று சுற்றும் முற்றும் பார்த்தது. ஆனுல் எல்லாக் கதவு களும் அடைக்கப்பட்டிருந்தன.

"நீ என் தோட்டத்தை விட்டுப் போகாமல் செய்துவிடுகிறேன். உனக்குத் தேன்மேல் ஆசை அல்லவா? என் தோட்டத்தில் இருக்கும் பூக்களில் கசப்புத்தேன் நிறையக் கிடைக்கும், அதையே குடி," என்று சொன்னுள்.

"ஒரு மூலிகையை எடுத்து நெருப்பில் போட்டாள். உடனே அது நீல நிறமாக எரிந்தது. அந்தப் புகைபட்டவுடன் தேனீ கறுப்பு நிறமாக மாறியது. அப்போது பூனை அம்மாள் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தது. கதவுச் சந்தில் நுழைந்து தேனீ தப்பி ஓடிற்று. அருகில் இருந்த வாய்க்காலில் போய் எட்டிப் பார்த்தது. ஒரு கண் நீல நிறமாகவும், ஒரு கண் சிவப்பு நிறமாகவும் இருந்தது.

தேனீ அங்கிருந்து பறந்து சென்றது. ஒரு தேன் கூண்டில் புகுந்தது. மற்றத் தேனீக்கள் எல்லாம் சுறுசுறுப்பாய் வேலை செய்தன. அவைகளுடன் சேர்ந்து இந்தத் தேனீயும் வேலை செய்யக் கற்றுக் கொண்டது. ஓயாமல் உழைத்தது. அதற்கு வேண்டியமட்டும் தேன் கிடைத்தது. இன்பமாகக் காலம் கழித்து வந்தது. அது மந்திரக்காரியைக் காணும்பொழுதெல்லாம் ஓடிப்போய் ஒளிந்துகொள்ளும். அவள் கையில் அகப்பட்டால் அவள் தோட்டத்திலேயே குடி இருக்கவேண்டும். அங்கே 'கசக்கும் தேன்' தானே கிடைக்கும்!

—

# ௪. அஞ்சா நெஞ்சன்

ஓர் ஊரில் ஓர் இளவரசன் இருந்தான். அவன் அஞ்சா நெஞ்சம் படைத்தவன். அவனுக்கு வீட்டில் பொழுது போகவில்லை. ஊர் ஊராகச் சுற்றி வந்தான்.

ஒரு நாள் இரவு அவன் களைத்துப்போய் ஒரு வீட்டு வாசலில் உட்கார்ந்தான். அங்கே பெரிய பந்தும் விளையாட்டுக் கருவிகளும் வைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொன்றும் ஓர் ஆள் உயரம் இருந்



இளவரசன் பந்தாடுவதை அரக்கன் பார்த்தல்

தது. அந்த வீட்டில் ஓர் அரக்கன் வசித்துக் கொண்டிருந்தான். அவன் அவைகளை எடுத்து விளையாடுவது வழக்கம்.

இளவரசன் சிறிது களைப்பாறிய பிறகு பந்தை எடுத்து விளையாடத் தொடங்கினான். அரக்கன் வெளியே வந்தான்.

"நீ ஒரு சிறிய பையன். என்னுடைய பந்தை எடுத்து எப்படி விளையாடலாம்? நீ அவ்வளவு கெட்டிக்காரனா?" என்று கேட்டான்.

"நான் நினைத்ததைச் செய்து முடிப்பேன். எதற்கும் அஞ்சமாட்டேன்," என்று சொன்னான்.

"அப்படியானால் சாவா மருந்து ஒரு மரத்தில் இருக்கிறது. அதைக்கொண்டுவர உன்னால் முடியுமா?" என்று கேட்டான்.

"அது எங்கே இருக்கிறது?" என்று இளவரசன் கேட்டான்.

"அது ஒரு பழமாக இருக்கிறதாம். அது என் மனைவிக்கு வேண்டும். உலகம் எல்லாம் தேடி அலைந்தேன். அது கிடைக்கவில்லை," என்று அரக்கன் கூறினான்.

"அதை நான் கண்டுபிடிக்கிறேன்," என்று இளவரசன் புறப்பட்டான்.

"அந்த மரத்தைச் சுற்றிலும் ஒரு முள் வேலி இருக்கிறதாம். அங்கே கொடிய விலங்குகள் காவல் இருப்பதாகச் சொல்கிறார்கள். மரத்தில் ஒரு வளையம் இருக்கிறதாம். அதன் வழியாகக் கையைவிட்டுப் பழத்தைப் பறிக்கவேண்டும். வளையம் கையில் மாட்டிக்கொண்டால் தப்புவிக்க முடியாது," என்று அரக்கன் கூறினான்.

இளவரசன் அரக்கனிடம் விடை பெற்றுக் கொண்டு அந்த மரத்தைத் தேடிச் சென்றான். பல

இடங்களிலும் தேடி அலைந்து முடிவில் ஓர் அழகான தோட்டத்திற்கு வந்து சேர்ந்தான். விலங்குகள் எல்லாம் நன்றாய் உறங்கிக்கொண்டு இருந்தன. முள் வேலியின்மேல் ஏறித் தோட்டத்திற்குள் நுழைந்தான். தோட்டத்தின் நடுவில் ஒரு மரத்தில் செக்கச்செவேல் என்று ஒரு பழம் தொங்கியது. அதன் அருகில் ஒரு வளையமும் இருந்தது.

அஞ்சா நெஞ்சன் மரத்தின்மேல் ஏறி வளையத்தில் கையைவிட்டு அந்தப் பழத்தைப் பறித்தான். வளையம் அவன் கையை இறுகப் பற்றிக்கொண்டது. வளையத்தினால் அவனுக்குப் புதிய வலிமை உண்டாயிற்று. வளையத்துடன் பழத்தையும் எடுத்துக் கொண்டு கீழே இறங்கி வந்தான். அங்கே காவலுக்கு வைத்திருந்த சிங்கம் விழித்துக்கொண்டது. அதற்குக் கோபம் வரவில்லை. நாய்க் குட்டியைப்போல் அவன் பின்னால் தொடர்ந்து வந்தது.

இளவரசன் நேராக அரக்கன் வீட்டிற்குச் சென்றான். "இதோ பழத்தைக் கொண்டுவந்து விட்டேன்," என்று அவனிடம் கொடுத்தான். அரக்கன் அதை வாங்கிக் கொண்டுபோய் அவன் மனைவியிடம் கொடுத்தான். அதைத் தானே கண்டு பிடித்ததாகப் பொய் சொன்னான்.

"நீயே கொண்டுவந்திருப்பாய் என்று நான் நம்பவில்லை. அப்படி இருந்தால், உன் கையில் வளையம் இருக்க வேண்டுமே!" என்று அவள் சொன்னாள்.

"அதற்கென்ன? வளையத்தை ஒரு நொடியில் கொண்டு வருகிறேன்," என்று வெளியில் சென்றான்.

"பழம் இருக்கும் இடத்தில் வளையமும் இருக்க வேண்டும். அதையும் எனக்குக் கொடு," என்று இளவரசனிடம் கேட்டான். இளவரசன் மறுத்து விட்டான். அதனால் இருவருக்கும் சண்டை வந்தது. அரக்கன் தோல்வியுற்றான். வளையத்தைத் தந்திர மாகப் பிடுங்கிக்கொள்ள எண்ணினான்.

"ஆற்றில் இறங்கிக் குளிக்கலாம் வா," என்று இளவரசனைக் கூப்பிட்டான்.

இளவரசன் தன் உடைகளை அவிழ்த்து வளை யத்தையும் கழற்றிக் கரையில் வைத்துவிட்டு, ஆற்றில் இறங்கினான். அரக்கன் வளையத்தை எடுத்துக் கொண்டு ஓட்டம் பிடித்தான். சிங்கம் அவனைத் துரத்திச் சென்று வளையத்தைப் பிடுங்கிக் கொண்டு வந்து இளவரசனிடம் சேர்த்தது.

அரக்கன் ஒரு மரத்தின் பின்னால் மறைந்து கொண்டு இருந்தான். இளவரசன் நீராடியபின் உடைகளை அணிந்துகொண்டிருந்தான். அரக்கன் பின்புறமாக வந்து மண்டைமேல் அடித்துக் கீழே தள்ளினான். அவனுடைய கண்களையும் குருடாக்கி விட்டான். பிறகு அவனை அருகில் இருந்த மலையின் உச்சிக்கு இழுத்துக்கொண்டு ஓடினான். சிங்கமும் துரத்திக்கொண்டு வந்தது. மலையின் உச்சியில் இருந்து அவனைக் கீழே தள்ள முயன்றான்.

சிங்கம் உடனே இளவரசனுடைய துணிகளைப் பிடித்து இழுத்து அவன் கீழே விழுந்து இறந்து போகாமல் காப்பாற்றியது. பிறகு அரக்கன்மேல் பாய்ந்து அவனை மலைமேல் இருந்து உருட்டி விட்டது. அரக்கன் கீழே உருண்டு மடிந்தான்.

சிங்கம் இளவரசனை அழைத்துச் சென்றது. ஒரு மூலிகையை எடுத்துக் கசக்கி அதன் சாற்றை அவன் கண்களில் பிழிந்து வாலினால் துடைத்தது. உடனே இளவரசனுடைய கண்களில் ஒளி உண்டாயிற்று. கண் இழந்தவன் சிங்கத்தின் உதவியால் மீண்டும் கண் பெற்றான். ஆண்டவனை வாழ்த்தினான்.

அந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டு அடுத்த ஊருக்குச் சென்றான். அங்கே ஓர் அரண்மனை இருந்தது. அதன் வாசலில் ஓர் அழகான இளவரசி நின்றுகொண்டு இருந்தாள். ஆனால் அவளுடைய நிறம் கன்னங்கரேல் என்று இருந்தது.

“என்னை உங்களால் காப்பாற்ற முடியுமா?” என்று அவள் கேட்டாள்.

“என்ன செய்யவேண்டும்?” என்று இளவரசன் கேட்டான்.

“இந்த அரண்மனையில் பேய்களும் பிசாசுகளும் நிறைந்திருக்கின்றன. அவைகளை விரட்டி அடித்தால் தான் எனக்கு நல்ல காலம் வரும்,” என்றாள்.

“இவ்வளவுதானா? இதற்கெல்லாம் நான் அஞ்ச மாட்டேன்,” எனக் கூறினான், இளவரசன்.

பேய்கள் நடமாடும் அறையில் போய் உட்கார்ந்து கொண்டான். நள்ளிரவில் பேய்கள் வந்தன. மூலை முடுக்குகளில் எல்லாம் இருந்து பேய்கள் ஓடி வந்தன.



பேய்களுக்கு இடையில் இளவரசன்

எல்லாம் ஒன்ருய்க் கூடிக் கூத்தாடின. அவன்மேல் ஏறி ஆடின. சில பேய்கள் அவனைக் குத்தின. இன்னும் சில பேய்கள் அடித்தன. மற்றும் சில உதைத்தன.

அவன் அடிக்கு அடி, உதைக்கு உதை திருப்பிக் கொடுத்தான். சிறிதும் அஞ்சாமல் பேய்களை அடித்தான். பேய்கள் பயந்து ஓட்டம் பிடித்தன.

அஞ்சா நெஞ்சன் வெளியே வந்தான். கறுப்புப் பெண் வாசலில் காத்துக் கொண்டிருந்தாள். அவன் முகத்தில் பன்னீர் தெளித்தாள். பேய்களிடம் போரிட்டதால் அவன் களைத்துப் போயிருந்தான்.

அவள் செய்த பணிவிடையால் அவனுடைய களைப்பு நீங்கிற்று.

பேய்கள் ஓடிப்போனதால் இளவரசியின் கருமை நிறம் மாறியது. பழைய நிறத்தையும், அழகிய வடிவத்தையும் பெற்றாள். இளவரசன் அவளை மணந்துகொண்டு அந்த அரண்மனையிலேயே இன்பமுடன் வாழ்ந்து வந்தான்.



# ௫. நல்ல பாட்டு

ஓர் ஊரில் பெரியண்ணன் என்னும் குடியானவன் இருந்தான். அவன் தம்பியின் பெயர் நல்ல தம்பி. பெரியண்ணன் பொல்லாதவன். தம்பி மிகவும் நல்லவன்.

பெரியண்ணன் தம்பியை அடித்துப் படாத பாடு படுத்தினான். ஒரு நாள் ஆடு காணமற் போய் விட்டது. நல்லதம்பி அதைத் தேடிக்கொண்டு போனான். பல இடங்களுக்குச் சென்று அலைந்து திரிந்தான். முடிவில் களைத்துப்போய் ஒரு மலைச் சாரலில் படுத்து உறங்கிவிட்டான்.

விழித்துப் பார்க்கும்பொழுது அவனைச் சுற்றிலும் தேவதைகள் பாடிக் கொண்டும், ஆடிக்கொண்




தேவதைகளுக்கு இடையில் நல்லதம்பி

டும் இருந்தன. பாட்டு மிகவும் இனிமையாக இருந்தது. நல்லதம்பியும் அவைகளுடன் சேர்ந்து ஆடினான்; பாடினான். பாட்டு நன்றாக அமைந்தது.

ஆட்டம் முடிந்தவுடன் தேவதைகள் மறைந்து போயின.

நல்லதம்பி வீட்டிற்குத் திரும்பி வந்தான். தேவதைகளின் அருளால் அவனுடைய தோட்டத்தில் ஆடுகளும் மாடுகளும் வந்து நிறைந்தன. பெரியண்ணனுக்குப் பொறுமை உண்டாயிற்று. நல்லதம்பியின் ஆடுமாடுகளைப் பிடுங்கிக்கொள்ள எண்ணங்கொண்டான்.

"உனக்கு இவ்வகைகள் எப்படிக் கிடைத்தன?" என்று கேட்டான். நல்லதம்பி நடந்தவைகளை எல்லாம் மறைக்காமல் சொன்னான்.

பெரியண்ணன் உடனே புறப்பட்டு அந்த மலைக்குச் சென்றான்.

"நல்லதம்பியை விட நான் நன்றாகப் பாடுவேன். அவனுக்குக் கிடைத்ததை விட நல்ல பரிசு நான் வாங்குவேன்," என்று சொல்லிக்கொண்டான்.

அன்று இரவு அங்கே படுத்து உறங்கினான். தேவதைகள் அவனைச் சுற்றி வந்து ஆடின. பெரியண்ணன் அவைகளுடன் சேர்ந்து பாடினான். மூச்சுப் பிடித்துக்கொண்டு கத்தினான். ஆனால் அவனுடைய பாட்டு தேவதைகளுக்குப் பிடிக்கவில்லை.

"உன் குரல் நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் உன் பாட்டு, தாளத்திற்குச் சேரவில்லை. வீட்டிற்குப் போ; கோழி கூப்பிடுகிறது," என்று ஒரு தேவதை கூறிற்று.

பெரியண்ணன் வீட்டிற்கு ஓடிச் சென்றான். ஆடுகளும் மாடுகளும் நிறையக் கிடைக்கும் என்று நினைத்தான். அவன் வீடும் வைக்கோல் போரும்



வீடும் வைக்கோல் போரும் தீப்பிடித்து எரிவதைப் பெரியண்ணன் பார்த்தல்

தீப்பிடித்து எரிந்தன. அவன் கைப்பொருள் எல்லாம் இழந்து, தம்பியின் உதவியை நாடிச் செல்ல வேண்டியதாயிற்று.

---

## ௨௰. கிளி மூக்கு

முன் ஒரு காலத்தில் மூக்கன் என்னும் ஏழைப் பையன் ஒருவன் இருந்தான். அவன் அப்பா கூலி வேலை செய்து வந்தார். அம்மா காய்கறி பழம் முதலியவற்றை விற்றுப் பிழைத்துவந்தாள். மூக்கன் பழக்கடையில் உட்கார்ந்து அம்மாளுக்கு உதவி செய்து வந்தான்.

ஒருநாள் ஒரு கிழவி கடைக்கு வந்தாள். அவளுடைய மூக்கு நீளமாக இருந்தது. காய்கறிகளையும் பழங்களையும் எடுத்துப் பார்த்தாள்.



காய்கறிக்கடைக்குக் கிழவி வருதல்

"வதங்கி வாடிப்போன காய்கறிகளுக்கு ஒரு கடை வேண்டுமா? பழங்களும் அழுகிப்போய்க் கிடக்கின்றன," என்று பேசினாள்.

மூக்கனுக்கு அவள் பேச்சுப் பிடிக்கவில்லை.

"இந்தக் கிழவிக்கு இங்கே என்ன வேலை? அவள் மூக்கின் அழகைப் பார்," என்று அவள் காது கேட்கும்படி சொன்னான்.

"ஓ அப்படியா? நீண்ட மூக்கு வேண்டுமானால் உனக்கும் விரைவில் அது கிடைக்கும்," என்று கூறினாள். கிழவி ஒரு கூடை நிறையக் காய்கறிகள் வாங்கினாள்.

"இந்தக் கூடையை என் வீட்டிற்குக் கொண்டு போகவேண்டும். உன் பையனை என்னுடன் கொஞ்சம் அனுப்பமுடியுமா?" என்று கேட்டாள்.

"அப்படியே ஆகட்டும்," என்று சொல்லிக் கடைக்காரி மூக்கனைக் கிழவியுடன் அனுப்பினாள்.

மூக்கன் அம்மாவின் சொற்படி கிழவியுடன் சென்றான். வீட்டிற்கு வந்து சேர்ந்ததும் கிழவி கூடையை வாங்கிக்கொண்டாள்.

"ஓடிப்போய்விடாதே! இங்கேயே இரு. கொஞ்சம் மோர் சாப்பிடு," என்று சொன்னாள்.

ஒரு கோப்பையில் மோர் கொண்டு வந்து கொடுத்தாள். மூக்கன் மோரைக் குடித்தான். மயக்கம் வந்தது. கனவு கண்டதுபோல் தோன்றிற்று. கண்ணை விழித்துப் பார்த்தான். பையன் அணிலாக மாறிவிட்டான்.

கிழவி அணிலுக்குச் சமையல் வேலை கற்றுக் கொடுத்தாள். பல ஆண்டுகள் சென்றன. ஒருநாள் கிழவி கடை வீதிக்குப் போயிருந்தாள்.

அணிலாக இருந்த மூக்கன் கிழவியின் அறைக்குள் போய்ச் சோதித்துப் பார்த்தான். அங்கே மருந்துகள் வைக்கப்பட்டிருந்தன. ஒரு மருந்தை எடுத்து மோந்து பார்த்தான். உடனே அவனுக்கு

மனித உருவம் வந்துவிட்டது. ஆனால், கூன் முதுகும் கிளி மூக்கும் அவனுக்கு வாய்த்தன.



மூக்கன் ஓடுவதைக் கண்டு எல்லோரும் நகைத்தல்

வீட்டைவிட்டு ஓட்டம் பிடித்தான். தெருவில் அவனைப் பார்த்து எல்லோரும் நகைத்தார்கள்.

"அவன் முதுகைப் பார்; மூக்கைப் பார்," என்று கேலி செய்தார்கள்.

மூக்கன் நேராகப் பழக்கடைக்குச் சென்றான் அம்மா வழக்கம்போல் உட்கார்ந்திருந்தாள். ஆனால் அவளுக்கு வயதாகிவிட்டது. முகம் செழிப்பாய் இல்லை.

"அம்மா ஏன் இப்படி இருக்கிறீர்கள்? என்னைக் காணாமல் ஏங்கி இருக்கிறீர்களா?" என்று கேட்டான்.

அம்மா அவனை நம்பமுடியவில்லை. கண்களை மூடிக்கொண்டாள்.

"அம்மா! உங்கள் மகனை உங்களுக்கே தெரியவில்லையா? அதற்குள் மறந்துவிட்டீர்களா?" என்று கதறினான்.

"என் அருமை மகன் எவ்வளவு அழகாய் இருந்தான்! நீ என் மகன் என்று வெட்கம் இல்லாமல் சொல்கிறுயே! அவனை இழந்துவிட்டு நான் உட்கார்ந்து கிடக்கிறேனே! என் மனதைப் புண்படுத்த வேண்டாம்," என்று சொன்னுள்.

மூக்கன் அப்பாவைத் தேடிச் சென்றுன். அப்பாவுக்கும் அடையாளம் தெரியவில்லை.

" அப்பா! என்னைத் தெரியவில்லையா? நீங்கள் என்னை மறக்கலாமா?" என்று கேட்டான்.

"என் மகன் காணுமற்போய் ஏழு ஆண்டுகள் ஆயின. அவனுடைய சாயல் சிறிதுகூட உன்னிடம் கிடையாது," என்று சொல்லி முகத்தைத் திருப்பிக் கொண்டார்.

மூக்கன் கண்ணுடிக்கு முன்னுல் நின்று பார்த்தான். கூன் முதுகுடன் குள்ளனுய் மூக்கை நீட்டிக் கொண்டு இருப்பதைக் கண்டான். அதனுல்தான் அப்பாவுக்கும் அம்மாவுக்கும்கூட அடையாளம் தெரியவில்லை என்று தெரிந்துகொண்டான்.

நல்ல வேளையாக அவனுக்கு அரண்மனையில் சமையல் வேலை கிடைத்தது. பாடுபட்டு வேலை செய்தான். நல்லபெயர் வாங்கினுன்.

அரண்மனைக்கு ஒரு வாத்து வந்தது. அது அவனை அழைத்து, "நான் ஒரு பெண்; என்னை ஒரு மந்திரவாதி வாத்துப்போல் ஆக்கிவிட்டான்," என்று சொல்லிற்று.

மூக்கன் அதை அரண்மனையிலேயே வைத்து வளர்த்து வந்தான். வாத்து அவனுக்குச் சமையல் அறையில் உதவியாக இருந்தது. புதிய வகைகளை எல்லாம் அவனுக்குக் கற்றுக்கொடுத்தது.

ஒருநாள் மூக்கன் வாத்துடன் தோட்டத்தில் உலாவச் சென்றான். வாத்து ஒரு மூலிகையைப் பறித்து அவனிடம் கொடுத்தது. "இதை மோந்து பார்," என்று வாத்து சொல்லிற்று.

மூக்கன் அதை மோந்து பார்த்தான். உடனே அவனுடைய கிளிமூக்கு சுருங்கிற்று. கூன் நிமிர்ந்தது. குட்டைக் கால்கள் நீண்டு வளர்ந்தன. மூக்கன் தன் உருமாறி அழகிய தோற்றத்துடன் விளங்கினான்.

மூக்கன் வாத்துடன் அரண்மனையைவிட்டுப் புறப்பட்டான். அவனை அங்கே இருப்பவர்களுக்கு அடையாளம் தெரியவில்லை. வாத்து ஒரு குளத்தில் முழுகி வெளியே வந்தது. உடனே அது அழகிய பெண்ணாக மாறிவிட்டது. மூக்கன் அவளை மணம் செய்துகொண்டு இன்பமாக வாழ்ந்திருந்தான்.



## எ. பிடிவாதக்காரன்

ஓர் ஊரில் ஓர் இளவரசன் இருந்தான். அவன் பிடிவாதக்காரன்.

பெரிய அரண்மனையில் அவன் குடி இருந்தான். அது சலவைக் கல்லால் ஆகியது. நடுவில் அழகான பூந்தோட்டமும் குளமும் அமைந்திருந்தன.

வீடு நிறைய ஆட்கள். அவனிடம் எல்லோரும் செல்லம் கொஞ்சினார்கள். அப்பா இறந்துபோய் விட்டார். அம்மா செல்லம் கொடுத்தாள்.

எப்பொழுது பார்த்தாலும் விளையாடிக் கொண்டே இருந்தான். பெரியவன் ஆனதும் காட்டிற்குப்போய் வேட்டையாடத் தொடங்கினான். அவனிடம் ஓர் அழகான குதிரை இருந்தது. அது வெள்ளை வெளேரென்று இருந்தது. நல்ல வேட்டை நாய் ஒன்றையும் வளர்த்து வந்தான். அந்த நாயும் பால் போன்று வெண்மையாக இருந்தது. குதிரைக்கும் நாய்க்கும் பட்டுத்துணி போர்த்தித் தங்கமணிகள் கட்டி இருந்தான்.

குதிரையும் நாயும் பேசிக்கொண்டன. இளவரசனுக்கு அந்தப் பேச்சு தெரியாது.

"இளவரசனுக்கு இன்று நல்லபாடம் கற்பிக்க வேண்டும்," என்று குதிரை சொல்லிற்று.

"எவரும் எதிர்த்துப்பேச முடியாது. இருந்தாலும் நாம் ஒருகை பார்க்கலாம்," என்று நாய் சொல்லிற்று.

இளவரசன் பொழுதுவிடிந்த பிறகும் உறங்கிக் கொண்டே இருந்தான். பாடம் படிக்கவில்லை. தங்கையோடு சண்டை போட்டான்.

கடுமையான வெயிலில் வேட்டைக்குப் புறப்பட்டான். அவனுடன் வந்த வேலையாட்கள் எல்லாம் களைத்துப்போய் நின்றுவிட்டார்கள். இளவரசன் குதிரையின்மேல் பறந்து சென்றான். குதிரை நிற்காமல் போய்க்கொண்டே இருந்தது. நாயும் பின் தொடர்ந்து சென்றது.

புதரில் இருந்து ஒரு மான் பாய்ந்து சென்றது. இளவரசன் குதிரையை அதன் பின்னால் ஏவினான்.



இளவரசன் மானைத் துரத்திச்செல்லுதல்

மான் அவன் கைக்கு அகப்படவில்லை. "அதைப் பிடிக்காமல் விடமாட்டேன்," என்று துரத்திச்

சென்ருன். காடு மலைகள் எல்லாம் கடந்துசென்ருன். மானைப் பிடிக்க முடியவில்லை. திரும்பிப் போகலாம் என்று குதிரையை நிறுத்திப் பார்த்தான். குதிரை சொன்னபடி கேட்கவில்லை. ஓடிக்கொண்டே இருந்தது. நாயும் நிற்காமல் ஓடிற்று.

ஒரு பள்ளத்தாக்கு வந்தது. அங்கே மான்களும், கரடிகளும், மயில்களும், முயல்களும், ஓநாய்களும், புலிகளும்கூட இருந்தன. கொடிய விலங்குகள் எல்லாம் இளவரசன்மேல் வந்து பாய்ந்தன. குலைத்துக்கொண்டும், சீறிக்கொண்டும், உறுமிக்கொண்டும் அவனைப் பின்தொடர்ந்து வந்தன.

இளவரசனுக்கு அது பிடிக்கவே இல்லை. விலங்குகளை அவன் வேட்டையாடினான். விலங்குகள்



விலங்குகள் இளவரசனை வேட்டையாடுதல்

அவனை வேட்டையாடின. குதிரை ஓடிக்கொண்டே இருந்தது. எதிரில் ஒரு பெரிய பாறை இருந்தது. குதிரை திடீரென்று திரும்பிற்று. இளவரசன்

குதிரையின்மேல் இருந்து கீழே விழுந்தான். கரடிகளும், புலிகளும் அருகில் வந்துவிட்டன. இளவரசன் எழுந்து ஓடினன்.

நெஞ்சு படபட என்று அடித்துக்கொண்டது. கால்களில் வலி எடுத்தது. மூச்சு அடைத்தது. கண் தெரியவில்லை. காதும் கேட்கவில்லை. ஒரு குகைக்குள் போய்ப் புகுந்துகொண்டான். தரையில் விழுந்தான். அதற்குமேல் ஓர் அடியும் எடுத்துவைக்க முடியவில்லை. குடிப்பதற்கு ஒரு சொட்டுத் தண்ணீர்கூடக் கிடைக்கவில்லை.

அவனுக்கு அறிவு வந்துவிட்டது. இனிமேல் என் முரட்டுத்தனத்தை விட்டுவிடுவேன் என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். குகைக்குள் வெளிச்சம் தெரிந்தது. கரடி, புலி, ஓநாய்களின் ஓசை அடங்கிற்று.

வெளிச்சம் வந்த பக்கமாய் நகர்ந்து சென்றன். ஒரு பெரிய அறையில் சிறுபிள்ளைகள் விளையாடிக் கொண்டு இருந்தார்கள். அவனைக் கண்டு எல்லோரும் ஓடிவந்தனர். அவனைச் சுற்றி வந்து குதித்து விளையாடினர்கள்.

இளவரசன் அணிந்திருந்த ஆண் உடை பெண் உடையாக மாறிவிட்டது. பையன்கள் எல்லாம் அவனைப் பார்த்து நகைத்தார்கள். 'பாப்பா பாப்பா' என்று கூப்பிட்டார்கள். அவனுக்கு மிகவும் வெட்கமாக இருந்தது.

"நான் பெண் அல்லேன் ; மறுபடியும் என்னைப் பெண் என்று கூப்பிட்டால் அடிப்பேன்," என்று சொன்னான்.

"அடே இவள் ஒரு பைத்தியக்காரி," என்று ஒரு பையன் சொன்னான். மற்றொருவன் சட்டையைப் பிடித்து இழுத்தான். இன்னொருவன் பிடித்துத் தள்ளினான். இளவரசன் அழத் தொடங்கினான்.

"இனிமேல் என் தங்கையை அடிக்கமாட்டேன். அழவைக்கமாட்டேன். நான் பட்டபாடு போதும்," என்று சொன்னான்.

இதைச் சொல்லி வாய் மூடுவதற்குள் பையன்கள் எல்லாம் மாயமாய் மறைந்துவிட்டார்கள். அவன் பெண் உடையும் மாறி பழைய உடை வந்துவிட்டது. ஓடிப்போன குதிரையும், நாயும் வந்து சேர்ந்தன.

"வீட்டிற்குப்போக வழி தெரியவில்லையே, என்ன செய்வது?" என்று விழித்தான். குதிரைமேல் ஏறிக்கொண்டான். நாய் வழிகாட்டியது. வீட்டிற்கு வந்து சேர்ந்தான்.

அவனுடைய முரட்டுத்தனம் மாறிவிட்டது. அன்றுமுதல் நல்ல பையனாக நடந்துகொண்டான். தாயினிடமும், உடன்பிறந்தோரிடமும், வேலைக்காரர்களிடமும் அன்புடன் இருந்தான். குதிரையும், நாயும் அவனிடம் அன்பு காட்டின.

---

## அ. முரட்டுப் பையன்

முன் ஒரு காலத்தில் ஒரு குடியானவன் இருந்தான். அவனுடைய மகன் பெருவிரல் அளவு உயரத்திற்குமேல் வளரவே இல்லை. ஒருநாள் குடியானவன் வயலில் வேலைசெய்யப் போனான்.

"அப்பா நானும் வருகிறேன்," என்று குள்ளன் சொன்னான்.

"நீ இங்கேயே இரு. என்னுடன் வந்தால் காணாமல் போய்விடுவாய்," என்று குடியானவன் சொன்னான்.

குள்ளன் அழத் தொடங்கினான். குடியானவன் அவனை எடுத்துச் சட்டைப்பையில் போட்டுக் கொண்டு தோட்டத்திற்குச் சென்றான். குள்ளனை வரப்பின்மேல் உட்காரவைத்துவிட்டு, வயலில் வேலை செய்துகொண்டிருந்தான். அந்த வழியாக ஓர் அரக்கன் வந்தான். குள்ளனை இரண்டு விரல்களால் எடுத்துத் திருப்பித் திருப்பிப் பார்த்தான். பிறகு அவனை எடுத்துக்கொண்டு ஓட்டம் பிடித்தான். குடியானவனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. பிள்ளையைப் பறிகொடுத்த வருத்தத்துடன் வீடு திரும்பினான்.

அரக்கன் குள்ளனைத் தன் வீட்டிலேயே வளர்த்துவந்தான். ஆறு ஆண்டுகளில் குள்ளன் உயரமாக வளர்ந்து வலிவுடையவன் ஆனான். அரக்கன் அவனை வயலின் அருகில் கொண்டுபோய் விட்டு

விட்டான். குடியானவன் வயலில் வேலை செய்து கொண்டு இருந்தான்.

"அப்பா என்னைத் தெரிகிறதா?" என்று பையன் கேட்டான்.




குள்ளனும் அரக்கனும்

"உன்னைப் பார்த்தால் அரக்கனைப்போல் தோன்றுகிறது. நீ என் மகன் அல்ல," என்றான் குடியானவன்.

"நான் உங்கள் மகன்தான்; கலப்பையை என்னிடம் கொடுங்கள். நான் இதை உழுது விடுகிறேன்," என்று கலப்பையைப் பிடுங்கிக்கொண்டான்.

கலப்பையை ஒரு கையால் பிடித்து அமுக்கினான். முழுவதும் பூமிக்குள் பாய்ந்தது. மறுபடியும் அதை வெளியில் எடுத்தான்.

"நான் உழுதுவிட்டு வருகிறேன். நீங்கள் வீட்டிற்குப்போய் அம்மாவைச் சமையல் செய்து வைக்கச்சொல்லுங்கள்," என்று சொன்னான்.

குடியானவன் வீட்டிற்குப் போனுன். பையன் ஒரு நொடியில் நிலத்தை முழுவதும் உழுதுவிட்டான். காட்டிற்குப்போய் இரண்டு பெரிய மரங்களை வேரோடு பிடுங்கினுன். இரண்டு மரங்களையும் இரண்டு தோள்களில் போட்டுக்கொண்டு வீட்டை நோக்கி நடந்தான்.

அம்மாவுக்குப் பையனை அடையாளம் தெரியவில்லை. அவன் உள்ளே போய் உட்கார்ந்தான்.


சாப்பாடு முழுவதும் விழுங்கிவிட்டான்

"அம்மா சாப்பிடுவதற்கு ஏதாவது கொடுங்கள்," என்று கேட்டான்.

வீட்டில் இருந்த சாப்பாடு முழுவதும் விழுங்கிவிட்டான். அப்பாவுக்கும் அம்மாவுக்கும் சாப்பாடு இல்லை.

"இன்னும் சாப்பிடுவதற்கு என்ன இருக்கிறது?" என்று கேட்டான்.

மறுபடியும் சோறு பொங்கிக் கொண்டுவந்து போட்டாள். அப்பொழுதும் அவன் பசி அடங்கவில்லை.

"நான் வெளியில்போய்ச் சம்பாதித்துக் கொண்டு வருகிறேன்," என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டான்.

பக்கத்து ஊரில் ஒரு கொல்லன் இருந்தான். அவனிடம் சென்று, "வேலை வேண்டும்?" என்று கேட்டான்.

"கூலி ஒன்றும் வேண்டியதில்லை. சோறு போட்டால் போதும்," என்று சொன்னான்.

கொல்லன் அவனை வேலைக்கு அமர்த்திக் கொண்டான். பையன் சம்மட்டியை எடுத்து அடித்தான். இரும்பு தூள் தூளாகப் பறந்தது. அடியில் இருந்த இரும்புப் பட்டரை பூமிக்குள் மறைந்து விட்டது.

"உன்னை வைத்து வேலைவாங்க என்னால் முடியாது; நீ வேறு இடம் பார்த்துக்கொள்," என்றான் கொல்லன்.

முரட்டுப் பையன் அவனுக்கு ஓர் உதை கொடுத்தான். கொல்லன் பறந்து போய் ஒரு வைக்கோல் போரின்மேல் விழுந்தான்.

முரடன் அடுத்த ஊருக்குப் போனான். ஒரு பண்ணையாரிடம் வேலைக்கு அமர்ந்தான். மற்ற

வேலைக்காரர்கள் எல்லாம் விடியற்காலையில் எழுந்து விறகு வெட்டச் சென்றார்கள். முரடன் படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. இரண்டுமணி நேரத்திற்குப் பின் காட்டிற்குச் சென்றான். எல்லோரும் விறகு வெட்டிக்கொண்டிருந்தார்கள். முரடன் இரண்டு மரங்களை வேரோடு பிடுங்கிக்கொண்டு அவர்களுக்கு முன் வீடு வந்துசேர்ந்தான்.

பண்ணையாருக்கு நடுக்கம் உண்டாயிற்று. என்ன செய்வானோ என்று நடுங்கினார். அவனை ஒழித்துவிட வேண்டுமென்று முடிவு செய்தார்.

ஒருநாள் முரடனைக் கிணற்றில் இறங்கிச் சேறு எடுக்கச் சொன்னார். மற்ற வேலைக்காரர்களை ஏவி அவன் தலைமேல் அம்மிக்கல்லைப் போடச்சொன்னார். கல் அவன் தலைமேல் விழுந்தது. ஆனால், அவன் அதைப் பொருட்படுத்தவில்லை. அம்மிக்கல்லைக் கழுத்தில் கட்டித் தொங்கவிட்டுக்கொண்டு மேலே ஏறிவந்தான். வேலைக்காரர்கள் ஓட்டம் பிடித்தார்கள்.

மறுநாள் இரவு பண்ணையார் முரடனை ஒரு சத்திரத்தின் காவலுக்கு அனுப்பினார். முரடன் ஓர் அறையில் உட்கார்ந்திருந்தான். நடு இரவில் கதவு படீர் என்று திறந்தது. தட்டங்களில் அருமையான சாப்பாடு வந்தது. தட்டங்கள் தாமாகவே நகர்ந்து வந்தன. இலைகள் போடப்பட்டன. கைகள் உணவை எடுத்துச் சாப்பிட்டன. உருவம் ஒன்றும் தெரியவில்லை.

முரடனுக்குப் பசி எடுத்தது. அவனும் போய் ஓர் இலையில் உட்கார்ந்து, வயிறு புடைக்கச் சாப்பிட்டான். சாப்பாடு முடிந்தது. விளக்கு அணைக்கப் பட்டது. அவன் கன்னத்தில் பளார் என்று அறை விழுந்தது. மற்றொரு குத்து முகத்தில் விழுந்தது.

முரடன் திருப்பி அடித்தான். குத்துக்குக் குத்து, அடிக்கு அடி திருப்பிக் கொடுத்தான். பொழுது விடிந்தது. முரடன் பண்ணையாரிடம் போய் நின்றான். அவன் உயிரோடு திரும்பி வந்ததைக் கண்டு பண்ணையார் அச்சம் கொண்டார்.

"நீங்கள் செய்த சூழ்ச்சி எல்லாம் எனக்குத் தெரியும். அதற்கு வெகுமதி இதுதான்," என்று ஓர் உதை கொடுத்தான். பண்ணையார் வானத்தை நோக்கிப் பறந்தார். முரடன் அடுத்த ஊருக்குப் பயணம் ஆனான்.

முரடன் ஒரு காட்டின் வழியாகச் சென்றான். காட்டின் நடுவில் ஒரு பெரிய கோட்டை இருந்தது. முரடன் கோட்டைக்குள் புகுந்தான். அங்கு ஓர் அழகிய பெண் அழுதுகொண்டு நின்றாள். முரடன் மனம் இளகிவிட்டது. அவள் அருகில் சென்று, "பெண்ணே ஏன் அழுகிறாய்; உனக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டான்.

"பூதம் வந்தால் உம்மை விழுங்கிவிடும்; போய் விடுங்கள்," என்றாள்.

"நீ சிறிதும் அஞ்சவேண்டாம். பூதம் எங்கிருக்கிறது? வரட்டும், ஒருகை பார்க்கிறேன்," எனக் கூறினன்.

"நான் இவ்வூர் அரசன் மகள். என்னைப் பூதம் திருடிக்கொண்டுவந்து சிறையில் வைத்திருக்கிறது. நீர் காப்பாற்றினல், உம்மை நான் என்றும் மறவேன்," என்ருள்

அவள் பேசி வாய்மூடுவதற்குள் பூதம் வந்தது. பூதம் முரடன்மேல் பாய்ந்தது. முரடன் பூதத்தின் மேல் பாய்ந்தான். இருவருக்கும் கடும்போர் நிகழ்ந்தது. முடிவில் முரடனே வெற்றி பெற்ருன்.

முரடன் இளவரசியை அழைத்துச் சென்று அரசனிடம் ஒப்புவித்தான். அரசன் இளவரசியை அவனுக்கே மணம் செய்வித்தான்.

முரடன் அரண்மனையிலேயே அவளுடன் இன்பமாக வாழ்ந்து வந்தான். அன்றுமுதல் அவனுடைய முரட்டுத்தனமும் மாறிவிட்டது.

---

## ௧௦. நல்ல பாடம்

ஓர் ஊரில் ஓர் அழகிய பெண் இருந்தாள். அவள் மிகவும் நல்லவள். ஆனால் அவளிடம் ஒரு கெட்ட பழக்கம் இருந்தது.

அவளிடம் முரட்டுத்தனம் கிடையாது; சோம் பேறித்தனமும் இல்லை. பொய் பேசமாட்டாள்; திருடமாட்டாள்; முணுமுணுக்கவும் மாட்டாள்.

அவளிடம் ஒரு குற்றம் மட்டும் இருந்தது. அதை மாற்ற எவராலும் முடியவில்லை. அப்பா பெருமூச்சுவிட்டார். அம்மா கண்ணீர் விட்டார்கள். அவளைக் கெஞ்சிக் கேட்டார்கள். மிரட்டியும் பார்த் தார்கள். ஆனால் மீண்டும் மீண்டும் அதே குற்றத் தைச் செய்தாள்.

"உனக்கு ஒரு பெட்டி நிறைய மிட்டாய் வாங் கித் தருகிறேன். நீ நல்ல பிள்ளையாக நடந்துகொள்ள வேண்டும்," என்று அம்மா சொன்னார்கள்.

"அப்படியே ஆகட்டும். என்னால் இயன்றவரை முயற்சி செய்கிறேன்," என்று சொன்னாள்.

மிட்டாய்ப் பெட்டியும் கைக்கு வந்தது. அதில் பலவகையான மிட்டாய்கள் இருந்தன. சில இனிப் பாய் இருந்தன. சில சுவையாக இருந்தன. சாப் பிட்டு முடிந்தவுடன் பழைய வழக்கத்தைத் தொடங்கிவிட்டாள். கதவுக்குப் பின்னால் மறைந்து நின்று, என்ன பேசுகிறார்கள் என்று கேட்டாள்.

தன் காதைக் கதவுச் சந்தில் வைத்துக்கொண்டு கேட்டாள்.



தாய் தந்தையர் பேசுவதைக் கதவுச் சந்தில் காதைவைத்துக் கேட்டல்

அப்பா பார்த்துவிட்டார். அன்று இரவு அவள் உறங்கிய பிறகு அவள் காதுகளில் பஞ்சு வைத்து அடைத்துவிட்டார். பஞ்சு கொஞ்சமாக உள்ளே வைத்திருந்ததால் அவளுக்கு அது தெரியவில்லை.

மறுநாள் காலையில் சாப்பிடுவதற்கு வந்து உட்கார்ந்தாள்.

"இட்டிலி வேண்டுமா? தோசை வேண்டுமா?" என்று அம்மா கேட்டார்கள்.

அவளுக்குக் காது கேட்கவில்லை.

"இன்று பள்ளிக்கூடம் உண்டா?" என்று அப்பா கேட்டார்.

அதற்கும் பதில் வரவில்லை. அப்பா ஓர் அறை கொடுத்தார். "கேட்ட கேள்விக்குப் பதில் சொல்வதற்கென்ன? காது செவிடாய்விட்டதா?" என்று அதட்டினர்.

அவள் ஒரு வாரம் வரையில் காது கேளாமல் துன்பப்பட்டாள். அதற்குப் பின் காதில் இருந்த பஞ்சு எடுக்கப்பட்டது. கதவின் மறைவில் காதை வைத்துக் கேட்கும் கெட்ட பழக்கத்தை அன்றோடு மறந்தாள்.

—

## ௧௦. பேசும் பிடில்

முன் ஒரு காலத்தில் ஒரு மந்திரவாதி இருந்தான். அவன் வயது முதிர்ந்தவன். ஒரு பெரிய பட்டணத்தின் மூலையில் பழைய வீட்டில் வசித்திருந்தான். உடைந்துபோன பொருள்களையும் பழைய புத்தகங்களையும் விற்பதற்குக் கடை ஒன்று வைத்திருந்தான்.

அவன் மந்திரவாதி என்று ஒருவருக்கும் தெரியாது. பக்கத்து வீட்டில் ஒரு பையன் இருந்தான். அவனுடைய தாய் இறந்துபோய்விட்டாள். அப்பா வேலைக்குப் போய்விடுவார். பையன் தனிமையாக இருந்தான். அவன் அடிக்கடி மந்திரவாதியின் கடைக்குப்போய் அவனுக்கு உதவி செய்வது வழக்கம்.

கடையில் ஒரு பழைய பிடில் இருந்தது. கிழவன் அதை விற்காமல் அப்படியே வைத்திருந்தான்.

"நீ பெரியவன் ஆன பிறகு அதை உனக்குக் கொடுக்கிறேன். அதை நீ வாசிக்கும்போது அந்த இசையைக்கேட்டு உலகமே மயங்கிவிடும்," என்று பையனிடம் சொன்னான்.

சில வேளைகளில் மந்திரவாதி அதை எடுத்து வாசிப்பான். உடனே இருள் அடைந்த கடையில் ஒளி வீசும். இன்பமயமாகத் தோன்றும்.

வாத்தியப் பெட்டியின் உள்ளே ஒரு தேவதை இருந்தது. அது நன்றாகப் பாடும். மந்திரவாதிக்கு

மட்டும்தான் அந்தப் பாட்டு கேட்கும். மந்திரவாதியின் உதவியால் அந்தப் பையனும் கேட்பான்.

பச்சைப்பசேர் என்று தோன்றும் வயல்களைப் பற்றிப் பாடும். தென்றல் காற்றைப் புகழ்ந்து பாடும். கடலின் தோற்றத்தையும், மலைகளின் பெருமையையும் பாடும். குயிலைப்போன்று கூவும். இவ்வளவு நல்ல தேவதையை வாத்தியப் பெட்டிக்குள் அடைத்துவைத்திருப்பதை எண்ணி, பையன் வருத்தப்பட்டான். அவன் கண்களில் நீர் பெருகிற்று.

ஒருநாள் பையன் வழக்கம்போல் கடைக்கு வந்தான். மந்திரவாதி பிடிலை எடுத்துப் பையனிடம் கொடுத்தான். "இதை நீயே வைத்துக்கொள்.



பையனுக்கு மந்திரவாதி பிடில் கொடுத்தல்

உனக்காகவே இவ்வளவு நாட்களாய் வைத்திருந்தேன். இது உனக்குச் சேரவேண்டியதுதான்," என்று சொன்னான்.

"எனக்கே சொந்தமாய்விட்டதா? இது உண்மை தானா? அதை நான் என்னவேண்டுமானாலும் செய்ய லாமா?" என்று கேட்டான்.

"ஆம், ஆம்," என்று கிழவன் சொன்னான்.

பையன் பிடிலை எடுத்து வாசித்தான். பாட்டு அருமையாக இருந்தது. தேவதை பாடிக்கொண்டே இருந்தது. அதைப்போல் ஒருநாளும் பாடினதில்லை. இன்பமும் துன்பமும் கலந்து பாடியது. தன்னைச் சிறையிலிருந்து விடுவிக்கும்படி தேவதை கேட்பது போல் அவனுக்குத் தோன்றியது. தூசு நிறைந்த பட்டணத்தைவிட அமைதி நிலவும் கானகத்திற்குப் போகவேண்டும் எனத் தேவதை கெஞ்சிக்கேட்டது.

பையனுக்கு மனம் இளகிற்று. பாட்டு முடிவதற்குள் வாசிப்பதை நிறுத்தினான். கிழவனைத் திரும்பிப்பார்த்தான்.

"பிடில் எனக்குச் சொந்தம் ஆய்விட்டது அல்லவா? தேவதையை ஏன் திறந்துவிடக்கூடாது?" என்று கேட்டான்.

"உள்ளே தேவதை இருப்பது உனக்கு எப்படித் தெரியும்? நான் உன்னிடம் சொல்லவில்லையே," என்று கிழவன் கேட்டான்.

"தேவதை பலதடவைகளில் என்னுடன் பேசி இருக்கிறது. அவிழ்த்துவிடும்படி அடிக்கடி என்னைக் கேட்டது. இன்று என்னிடம் மிகவும் கெஞ்சிக் கேட்கிறது. இனிமேல் தேவதையை அடைத்து

வைப்பதற்கு என் மனம் ஒப்பவில்லை. உண்மையில் இது என்னுடைய பிடில் ஆக இருந்தால், இப்பொழுதே தேவதையைப் போகவிடுவேன்,'' என்று சொன்னான்.

“அப்படிச்செய்தால் மறுபடியும் இந்தப் பிடில் பாடாது. தேவதையை விட்டுவிட்டால் உனக்குப் பெயரும், புகழும், பணமும் வந்துசேராது,'' என்று மந்திரவாதி சொன்னான்.

“தேவதையை அடிமைப்படுத்திவைக்க என்னால் முடியாது,'' என்று சொல்லி பிடிலைக் கீழேபோட்டு உடைத்தான்.

பிடிலின் உள்ளே இருந்து ஓர் அழகிய தேவதை வெளிப்பட்டது. அது வானவில்லின் நிறங்களுடன்



பிடிலிலிருந்து தேவதை வெளிப்படல்

அழகாகத் தோன்றியது. பையனைப்பார்த்து, ‘கெக் கெக்’ என்று சிரித்தது.

"நீ என்னைக் காப்பாற்றினாய். அதை நான் என்றும் மறக்கவேமாட்டேன். இனிமேல் உன்னால் பிடில் வாசிக்கமுடியாது. ஆனால் நான் அடிக்கடி உன்னிடம் வந்து பாடுவேன். நீ அதை எழுதி மற்றவர்களுக்குக் கொடு. அதில் உனக்கு ஏராள மான பொருள்கள் கிடைக்கும். அதன்பிறகு உனக்கு ஒரு குறைவும் வராது," என்று சொல்லிவிட்டுத் தேவதை பறந்து போய்விட்டது.

கிழவன் உடைந்த துண்டுகளைப் பொறுக்கி எடுத்தான். பையனிடம் கோபித்துக்கொள்ள வில்லை.

"நீ பெரிய பணக்காரன் ஆகப்போகிறாய். இந்த ஏழையையும் இந்தச் சிறிய கடையையும் மறந்து விடாதே," என்று கிழவன் சொன்னான்.

தேவதையின் வாக்குப் பலித்தது. அவன் எழுதிய கவிகள் உலகம் எல்லாம் பரவின. அற்புத மாக அமைந்திருந்தன. அவன் பெரும் புகழுடன் வாழ்ந்துவந்தான்.

—

## கக. வைரமும் தவளையும்

ஓர் ஊரில் ஒரு பெண் இருந்தாள். அவள் ஒரே பெண் ஆதலால், அவளுடைய தாய் அவளை மிகவும் செல்வமாக வளர்த்துவந்தாள். அவள் தன்னை அழகுபடுத்திக்கொள்வதிலேயே பொழுதெல்லாம் வீணுக்குவாள்; சோம்பேறியாகக் காலம் கழித்து வந்தாள். அவளுடைய மாமன் மகள் **கண்ணம்மாள்** அந்த வீட்டிலேயே வளர்ந்துவந்தாள். அவளுடைய தந்தையும் தாயும் இறந்துபோய்விட்டனர். அவளைப் பார்த்துக்கொள்வதற்கு வேறு எவரும் இல்லை.

கண்ணம்மாள் வீட்டுவேலை முழுவதும் செய்வது வழக்கம். அவளுக்கு நல்ல துணி கிடையாது. அவள் மிகவும் நல்லவள். வீட்டுக்கார அம்மாளும் அவள் மகளும் கண்ணம்மாளைக் கொடுமைப்படுத்தி வந்தனர். வீட்டுக்காரியின் மகள் பத்திரகாளியின் வடிவமாக இருந்ததால், அவளை ஊரார் **பத்திரகாளி** என்றே அழைத்தனர்.

ஒருநாள் பத்திரகாளி வேடிக்கைபார்க்கப் புறப்பட்டாள். ஆனால், கண்ணம்மாளைத் தன்னுடன் அழைத்துச்செல்லவில்லை.

வீட்டுக்கார அம்மாள், "உனக்கு என்னடி வேடிக்கை? கந்தல் துணியைக் கட்டிக்கொண்டு நீ எங்கே போவது?" என்று சொல்லிவிட்டாள். கிணற்றுக்குப்போய்த் தண்ணீர் கொண்டுவரச் சொன்னாள்.

கண்ணம்மாள் கிணற்றுக்குப்போய்க் குடத்தில் தண்ணீர் எடுத்துக்கொண்டு வரும்வழியில், மரத் தடியில் சற்று இளைப்பாறலாம் என்று உட்கார்ந் தாள். தன் நிலைமையை எண்ணிக் கண்ணீர் விட்டாள். உடனே ஒரு குரல் கேட்டது.

"குழந்தாய்! இந்த ஏழைக்குக் கொஞ்சம் தண்ணீர் கொடுக்கிறாயா?" என்று ஒரு கிழவி பக்கத்தில் வந்து கேட்டாள்.

"அதற்கென்ன தடை? உங்களால் இந்தக் குடத்தைத் தூக்கமுடியாது. நான் மெதுவாய் ஊற்றுகிறேன். நீங்கள் நீர் அருந்துங்கள்," என்று கண்ணம்மாள் சொன்னாள்.



கிழவிக்குக் கண்ணம்மாள் நீர் கொடுத்தல்



நீர் அருந்திய கிழவி கண்ணம்மாளுக்கு ஒரு வரம் கொடுத்தாள்.

"நீ அன்புடன் பேசுகிறாய். நீ பேசும்பொழு தெல்லாம் முத்தும், வைரமும், ரோஜாவும் உதிர

வேண்டும்,'' என்று வரம் கொடுத்தாள். இதைச் சொல்லிமுடித்தவுடன் கிழவி மறைந்துவிட்டாள்.

கண்ணம்மாளுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. மறுபடியும் குடத்தை நிரப்பிக்கொண்டு வீடு நோக்கி நடந்தாள். வீட்டுக்கார அம்மாள் வாசற்படியிலேயே நின்றுகொண்டிருந்தாள்.

"இவ்வளவு நேரம் என்ன செய்தாய்?'' என்று வீட்டுக்காரி அதட்டினள்.

"மன்னிக்கவேண்டும்,'' என்று கண்ணம்மா பணிவுடன் கூறினள். அவள் பேசியதும் அவள் வாயிலிருந்து வைரங்கள் உதிர்ந்தன.

"என்னடி இது? அருமையான வைரங்கள். இவைகள் எங்கிருந்து வந்தன?'' என்று கேட்டுக்கொண்டே வைரங்களைப் பொறுக்கி எடுத்துக்கொண்டாள்.

"என் வாயிலிருந்து வருகின்றன,'' என்று கண்ணம்மா சொன்னாள். இன்னும் மிகுதியாக வைரங்கள் உதிர்ந்தன.

வீட்டுக்கார அம்மாளுக்கு வியப்பு உண்டாயிற்று. கண்ணம்மா கிழவியைப்பற்றியும் அவள் கொடுத்த வரத்தைப்பற்றியும் சொன்னாள். வைரங்களும், முத்துக்களும் வந்து குவிந்தன. வீட்டுக்காரி வாரி வாரி மடியில் கட்டிக்கொண்டாள்.

"நாளைக்கு என் மகளை அங்கே அனுப்புகிறேன். அவள் இதைவிட நல்ல வரம் வாங்கிவருவாள்,'' என்று சொன்னாள்.

மறுநாள் பத்திரகாளி குடத்தை எடுத்துக் கொண்டு கிணற்றுக்குச் சென்ருள். அம்மா புத்திமதி சொல்லி அனுப்பினுள். முதலில் அவள் போக முடியாதென்று மறுத்தாள். அம்மா வற்புறுத்திய தால், மனம் இல்லாமல், புறப்பட்டுப்போனுள்.

பத்திரகாளி குடத்தில் தண்ணீரை நிரப்பிக் கொண்டு வரும்பொழுது கிழவி வந்து தண்ணீர் கேட்டாள். அவள் கந்தல் துணியை உடுத்தி இருந்தாள். கிழிந்த துணி கட்டியவர்களைக் கண் டாலே அவளுக்குப் பிடிக்காது. கிணற்றுக்குப் போய்க் குடம் தூக்கச்சொன்னதால் அம்மாவின் மேல் கோபம்.

"தண்ணீர் வேண்டுமானுல் நீயே கிணற்றி லிருந்து எடுத்துக்கொள். பிச்சைக்காரிக்கு வேலை செய்ய நான் வரவில்லை," என்று பத்திரகாளி கோபத்துடன் கூறினுள்.

"சிறிதும் அன்பில்லாத பெண். இரக்கம் என் பதே உனக்குத் தெரியாதுபோல் இருக்கிறது. இருந் தாலும் உனக்கு ஒரு வரம் தருகிறேன். நீ பேசும்போ தெல்லாம் ஒரு பாம்பும், ஒரு தவளையும் உன் வாயி லிருந்து வெளிப்படும்," என்று சொல்லி மறைந்து போனுள்.

பத்திரகாளிக்கு இதில் நம்பிக்கை இல்லை. குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு வீட்டிற்குச் சென்ருள். அம்மா வாசலிலேயே காத்துக் கொண்டு இருந்தாள்.

"கிழவியைக் கண்டாயா?" என்று கேட்டாள்.

"ஆம் ஆம் ஒரு பிச்சைக்காரக் கிழவியைப் பார்த்தேன்," என்று பத்திரகாளி சொன்னாள். உடனே அவள் வாயிலிருந்து ஒரு பாம்பும் ஒரு தவளையும் வந்து விழுந்தன.

பத்திரகாளி பயந்து நடுங்கினாள். நடந்தவைகளை எல்லாம் அம்மாவிடம் சொன்னாள். பாம்புகளும் தவளைகளும் வந்து குவிந்துவிட்டன.

"இதெல்லாம் கண்ணம்மாளின் வேலை. அவளுக்கு நல்ல தண்டனை கொடுக்கிறேன் பார்," என்று அம்மா கத்தினாள்.

ஒரு தடியை எடுத்துக் கண்ணம்மாளை அடிக்கப் போனாள். கண்ணம்மாள், "ஐயோ நான் ஒன்றும் செய்யவில்லையே?" என்று மண்டியிட்டுக் கதறினாள்.

உடனே தேவதை அங்கே தோன்றியது. "கண்ணம்மாளை அடிக்காதே. அவள் ஒரு குற்றமும் செய்யவில்லை. உன் மகள் அவளுடைய தீச்செயல்களால் இந்த நிலைமைக்கு வந்தாள். நான் கண்ணம்மாளைக் கொண்டுபோய் நல்லவர்கள் இருக்கும் இடத்தில் சேர்த்துவிடுகிறேன். உன் மகள் நல்ல வார்த்தை பேசக் கற்றுக்கொண்டால், என் சாபம் நீங்கும். அன்புகலந்த வார்த்தைகள் மலர்களை விடச் சிறந்தவை. வைரங்களைவிட விலை உயர்ந்தவை," எனக் கூறித் தேவதை மறைந்துபோயிற்று.

---

# ௧௨. முயலின் குறும்பு

"அத்தை ஊரிலிருந்து வரப் போகிறார்கள்," என்று முயல் அம்மா சொல்லிற்று. முயல்தம்பி குறும்புக்காரன். அவனுக்கு அத்தையை அவ்வள வாகப் பிடிக்காது.

மாடியில் அத்தைக்குப் படுக்கை விரித்திருந்தது. முயல் தம்பி அந்தப் படுக்கையின் அடியில் இரண்டு மூன்று மரக்கட்டைகள் போட்டுவைத்தான்.



முயல் அம்மா மறுபடியும் மாடிக்குப் போனார் கள். படுக்கையை உதறி விரிக்கும்போது மரக் கட்டைகளைக் கண்டு பிடித்துவிட்டார்கள். அது முயல்தம்பியின் வேலை என்று அவர்களுக்குத் தெரி யும். மரக்கட்டைகளை அவனுடைய படுக்கையின் அடியில் வைத்துவிட்டுக் கீழே வந்தார்கள்.

அத்தை வந்து சேர்ந்தார்கள். பிள்ளைகளுக்குப் பொம்மைகள் மிட்டாய் வாங்கி வந்தார்கள். முயல் தம்பிக்கு அதில் ஒன்றும் பிடிக்கவில்லை.

அத்தைக்குக் களைப்பாய் இருந்தது. படுக்கைக்குப் போய்விட்டார்கள். "அத்தைக்குப் படுக்கை மெத்தென்று இருக்கும். சுகமாய்ப் படுத்து உறங்கட்டும்," என்று தம்பி தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான். பிள்ளைகளும் படுக்கச் சென்றார்கள்.

தம்பி தவளைபோல் குதித்தான்; ஆடினான்; பாடினான்; பிறகு ஓரே பாய்ச்சலில் படுக்கையில் போய் விழுந்தான்.

"ஐயோ! அப்பா! என் முதுகு போச்சே!" என்று கத்தினான். எல்லோரும் ஓடி வந்தார்கள். அத்தையும் ஓடி வந்தாள்.

"சரி சரி, எனக்குத் தெரியுமே முயல்தம்பியின் வேலை. கையையும் காலையும்வைத்துக்கொண்டு சும்மா இருக்கமாட்டானே," என்றார்கள் அத்தை.

அத்தை ஊருக்குப் போனவுடன், "உன் திருட்டு வெளியாகிவிட்டது. நீ அத்தையை ஏமாற்றினாய். ஆனால் நீயே ஏமாந்துவிட்டாய். இனிமேல் குறும்பு செய்யாதே," என்று அம்மா எச்சரித்தார்கள்.

தம்பிக்கு வெட்கமாய் இருந்தது. மற்றப் பிள்ளைகள் எல்லாம் அவனைப்பார்த்துச்சிரித்தார்கள்.








